


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


# கவி பாரதி

பத்தியொடு முன்விஷ்ணு சித்தர்தொழு கண்ணனின்
  பரிச்யமுண் டாக்கி விட்டான்
பாரதத் தாயையே பாஞ்சாலி யாக்கிநாம்
  பார்க்கக் கொடுத்து வைத்தான்
வித்தக விளக்கைஎன் வீட்டினுள் ளேஏற்ற
  வேதாந்த ஜோதி தந்தான்
விஞ்ஞான மேபண்டை மெஞ்ஞான மென்பதனை
  விரிவாய் எடுத்து ரைத்தான்
இத்தரையில் யாவரும் ஒத்துவாழ் வோம்நம்மில்
  ஏதுமே பேத மில்லை
என்றுசம தர்மத்தை மன்றேறி ஓதினன்
  ஏங்கிக் கிடந்த போழ்தில்
சித்தனைப் போல்வந்து முத்தமிழ் வளத்தையும்
  செம்மையுறு மாற மைத்தான்
சிவசக்தி யேஉலக நவசக்தி யாமெனும்
  சேதியும் சொல்லி வைத்தான்

ஈன்றதென் னாட்டிலும் ஆன்றதோர் தெய்வமிங்
  கில்லவே இல்லை யென்றான்
இழிவுற்ற தாயகத் தழிவினைப் போக்கவே
  ஈசனின் பூசை யென்றான்
ஊன்றிப் படித்தும்முன் சான்றோர்கள் சொற்பொருள்
  உய்த்துணர மாட்டா மையால்
உள்ளங் குழம்பையில் தெள்ளுதமி ழில்''கீதை''
  ஓதிஅறி வூட்டி விட்டான்
கான்றெழும் பாரதத் தொன்றிப் பராவிடும்
  கனலான ஜன சக்தியை
காந்தியின் பாதையில் சாந்தமாய்ப் போய்வெற்றி
  காணச் செலுத்தி விட்டான்
தேன்தமிழ்ப் பாக்களைத் தான்கொண்டு வந்ததில்
  தினமெனை முழுக வைத்தான்
தேவமாக் கவி! எங்கள் தேசமாக் கவி! நமது
  நேசமாக் கவி பாரதி!

திருவானைக்காவல்

தாமரைச் செல்வன்

## அரசியலும் மாணவர்களும்

மாணவச்செல்வங்களை அரசியலில் ஈடுபடுத்தி, அந்த நிழலிலே வாழ்க்கை நடத்துவதற்குச் சில கட்சிகள் முனைகின்றன என்றால் அது மிக மிக வருந்தத்தக்கது. மாணவர்களை அரசியலில் ஈடுபடுத்துவதால் அவர்கள் வாழ்க்கையை மட்டுமே கெடுப்பதாகக் கூறமுடியாது. அது எதிர்கால பாரதத்தையே பாதிப்பதாகத்தான் முடியும்.

அண்மையில் கும்பகோணத்தில் நடைபெற்ற தஞ்சை மாணவர் காங்கிரஸ் மாநாட்டில் மாநில முதலமைச்சர், அரசியலுக்கும் மாணவர்களுக்கும் உள்ள தொடர்புகளை விளக்கியிருக்கிறார்.

மாணவர்கள் அரசியலை முழுக்க முழுக்கத் தெரிந்து கொள்ள வேண்டும்; ஆனால் மாணவப்பருவம் முடியும் வரை நேரிடையாக ஈடுபாடு கொள்ளுதல் கூடாது என்று தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

முதலமைச்சர் குறிப்பிட்டுள்ளது போல மாணவப் பருவம் துடிப்புள்ள பருவம்; கொள்கைப் பிடிப்பு, வாழ்க்கைத் தொல்லைகளைக் காணும் போது தளர்ந்து விடுகிறது என்பதும் உண்மைதான்.

அடுத்து, அன்று விடுதலைப் போராட்டத்தில் மாணவர்களை ஈடுபடுத்திய காங்கிரஸ் இன்று மாணவர்படிப்பில் தலையிடக் கூடாதென அரசியல் கட்சிகளைக் கேட்டுக் கொள்வது விசித்திரமாக இல்லையா என்று கேட்கின்ற எதிர்க் கட்சிக் காரர்களின் குற்றச் சாட்டுக்கும் முதலமைச்சர் பதில் கூறியிருக்கிறார். அந்தக் காலத்தில் காந்தியடிகள், 'ஆற்றில் ஒருகால் சேற்றில் ஒருகால்' வைத்துக் கொள்ளும்படி சொல்லவில்லை. காந்தியடிகளின் போராட்டம் தனித்தன்மை வாய்ந்தது என்றார்.

மாணவர் காங்கிரஸ் மாநாட்டை ஆரம்பித்து வைத்த முதலமைச்சர், பொதுத் தேர்தலில் எதிர்க் கட்சிகள் கூட்டுச் சேர்வதன் ரகசியத்தை விளக்குகையில், 'தனித்து நிற்க எந்த எதிர்க் கட்சிக்கும் தகுதியில்லை என்பதைத்தானே 'புதிய கூட்டுறவு' காட்டுகிறது' என்று கேட்டார்.

13—11—1960

# குழந்தைகள் பராமரிப்பு

**நாட்டின் எதிர்காலக் குடிமக்களான குழந்தைகளை நல்லவர்களாகவும் வல்லவர்களாகவும் ஆக்கிக்காக்கும் பொறுப்பு தேசியத் திட்டத்தில் முக்கியமானதோர் அம்சமாகிவிட்டது. நவம்பர் 14 ந் தேதி எங்கும் கொண்டாடப்படுகிற குழந்தைகள் தினத்தையொட்டி இந்தக் கட்டுரை வெளியிடப் பெறுகிறது.**

குழந்தைகளுக்கான நலத் திட்டங்களுக்கு உதவிபுரிவதில், மத்திய சர்க்காரிலுள்ள பல்வேறு ஸ்தாபனங்களும் சேர்ந்து, ஒரே ரீதியில் பணியாற்றும்படி பார்த்துக் கொள்வதற்காக, மந்திரி சபைக் காரியாலயத்துக்குள்ளாகவே இணைப்புச் சமிட்டியொன்று அமைக்கப்பட்டிருக்கிறது.

சிறந்த முறையில் அமைந்துள்ள பெரிய சுகாதாரத் திட்டங்கள், அதிகக் கல்வி வசதிகள், மக்களின் வாழ்க்கை நிலைமைகளில் பொதுவான அபிவிருத்தி ஆகிய நடவடிக்கைகள் குழந்தைகளின் நலனுக்கு வகை செய்யும் பிரத்தியட்ச அம்சங்களாகும்.

உதாரணமாகக் கல்வியை எடுத்துக் கொள்வோம். பத்துக் குழந்தைகளில் சுமார் ஆறு குழந்தைகள் வீதம் இப்போது பள்ளிக்கூடம் சென்று வருகின்றனர். அடுத்த ஐந்து வருஷங்களில் அதாவது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், 6–11 வயதுப் பிரிவிலுள்ள ஒவ்வொரு குழந்தையும் பள்ளிக்குச் செல்லும்படி பார்த்துக் கொள்வது லட்சியமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. உயர்ந்த வயதுத் தொகுதியைச் சேர்ந்த மாணவர்களுக்கான கல்வி வசதிகளும் இதற்குத் தகுந்தாற்போல் அதிகப்பத்தடுப் பட்டு வருகின்றன. வருங்கால சந்ததியினர் இந்த ஏற்பாடுகளின் அனுகூலங்களை நன்கு அனுபவிக்க முடியும்.

சுகாதாரத் துறையில் மகத்தான முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இப்போது பிறக்கிற குழந்தைகளில் நூற்றுக்குத் 90 குழந்தைகளுக்குமேல் உயிருடன் இருக்கின்றன.

குழந்தைகளிடையே பெருவாரி மரணங்களை ஏற்படுத்துகிற மலேரியா, வைசூரி போன்ற நோய்கள் பெருமளவில் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. மலேரியா நோய் ஒழிப்புக்காக ஒரு தீவிரத் திட்டம் இப்போது நடத்தப்பட்டு வருகிறது. குழந்தைகளுக்கு மலேரியா நோய் ஏற்பட்ட பிறகு ஈரல் குலைக்கட்டி ஏற்படுவது இப்போது பெருமளவில் குறைந்திருப்பதாக, சமீபத்தில் நடத்தப்பட்ட சர்வே ஒன்றிலிருந்து தெரியவருகிறது. இவ்வாறு ஈரல் குலைக்கட்டி ஏற்படும் விகிதமானது நான்கு ஆண்டுக் காலத்தில், பீஹாரில் 56–லிருந்து 11–க்கும்(ஒரு ஆயிரம் பேருக்கு), மேற்கு வங்காளத்தில் 20–லிருந்து 4–க்கும் குறைந்திருக்கிறது.

பி. ஸி. ஜி. ஊசி குத்தும் பெரிய திட்டத்தின் கீழ், சிறு வயதிலிருந்தே குழந்தைகளுக்கு க்ஷயரோக நோயிலிருந்து பாதுகாப்பளிக்க ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

குழந்தைகளின் போஷாக்கை விருத்தி செய்வதற்கு விசேஷ கவனம் செலுத்தப் பட்டிருக்கிறது. பல்வேறு திட்டங்களின் கீழ், இந்நாட்டின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள அனேக ஆரம்பப் பள்ளிகளில் குழந்தைகளுக்கு இலவசமாகப் பால் வழங்கப்பட்டு வருகிறது. அனேக இடங்களில் இருவச மதிய உணவும் அளிக்கப்பட்டு வருகிறது.

உடற்பயிற்சியும் விளையாட்டுக்களும் வலியுறுத்தப்பட்டுள்ளன; ஒழுங்குக் கட்டுப்பாட்டுடன் கூடிய முறையில் நடந்து கொள்ளவும் செயலாற்றவும் கற்றுக்கொள்கையிலேயே, தேசீய ஒழுங்குக் கட்டுப்பாடுத் திட்டம் போன்ற திட்டங்களின் கீழ் ஆயிரக்கணக்கான குழந்தைகள் தங்களுடைய உடல் நலத்தை அபிவிருத்தி செய்து வருகின்றனர்.

குழந்தைகளுக்குப் பாதுகாப்பளிப்பதற்காக அனேக மாநிலங்கள் விசேஷச் சட்டங்களை இயற்றியிருக்கின்றன. இளங் குற்றவாளிகளையும், தத்தாரியாகத் திரியும் குழந்தைகளையும் கொண்டுவந்து பயிற்சியளித்து, தக்க முறையில் பராமரித்து வருவதற்கு இச்சட்டங்கள் வகை செய்கின்றன. இத்தகைய பிரச்னைகளை கவனித்துக் கொள்வதற்காக உத்தியோக ரீதியிலும் தனிப்பட்ட முறையிலும் பல ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இன்றையக் குழந்தைகள் வருங்காலப் பிரஜைகள். ஒரு சிறந்த தேசத்தையும் உலகத்தையும் உருவாக்குவதற்குக் குழந்தைகளின் பராமரிப்பும் ஷேமநலமும் அத்தியாவசியமானவையாகும்.

குழந்தைகளின் நலத்தைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பு பெற்றோர்களையும் குடும்பத்தினர்களையும் மட்டும்தான் சேர்ந்தது என்ற நிலை இப்போது முற்றிலும் மாறிவிட்டது. இது ஒரு தேசீயப் பொறுப்பாகும். தேச நிர்மாணத் திட்டத்தின் இணைப்பானதொரு அங்கமாக இது

1956–வது ஆண்டிலிருந்தே உலகமெங்கிலும் குழந்தைகள் தினம் கொண்டாடப்பட்டு வருகிறது. உலகெங்கிலும் குழந்தைகளுக்கிடையே சகோதர பாவத்தையும் நல்லுணர்ச்சியையும் வளர்ப்பதற்கும், குழந்தைகளின் நல அபிவிருத்திக்கான நடவடிக்கைகளை மேற்கொள்வதற்குமான ஒரு தினமாக இது கொண்டாடப்படுகிறது.

இந்தியாவில், குறிப்பாக கிராமங்களில் ஏற்படுத்தப்பட்டுள்ள பள்ளிக்கூடங்கள், குழந்தைகளின் பூங்காக்கள், விளையாட்டு மைதானங்கள், சுகாதார நிலையங்கள், நூல் நிலையங்கள், பொழுதுபோக்கு நிலையங்கள் ஆகியவை, தற்காலக் குழந்தைகளுக்கும் வருங்காலக் குழந்தைகளுக்கும் சிறந்த வாழ்க்கைக்கு வகை செய்யவேண்டும் என்று மக்கள் கொண்டுள்ள ஆசையைப் பிரதிபலிப்பவையாக அமைந்துள்ளன.

சுயேச்சை ஸ்தாபனங்கள் குழந்தைகளின் நலத்துக்காக எவ்வளவோ சிறந்த நற்பணிகள் ஆற்றிவருகின்றன 1952–ல் ஏற்படுத்தப்பட்ட 'இந்திய குழந்தைகள் ஷேமநலக் கௌன்சில்,' இந்நாட்டில் குழந்தைகள் நல இயக்கத்தின் ஒரு சிறந்த சாதனமாக வளர்ந்திருக்கிறது. குழந்தைகள் நலத்துக்காகப் பணியாற்றி வருகிற பல்வேறு சுயேச்சை ஸ்தாபனங்களுக்கிடையே தொடர்பு ஏற்படுத்துவதற்கும் 'அவர்களுடைய திட்டங்களைக் குழந்தைகளின் நலனுக்காக ஐந்தாண்டுத் திட்டங்களில் வகுக்கப்பட்டுள்ள பெரிய திட்டங்களுடன் இணைப்பதற்கும் இக் கௌன்சில் உதவிபுரிந்து வருகிறது.

1953–ல் அமைக்கப்பட்ட 'மத்திய சமூக ஷேமநல போர்டு' குழந்தை நல சேவைகளை மிகவும் விரிவான முறையில் செய்து வருகிறது. இந்த போர்டு கிராமங்களில் நல வளர்ச்சித் திட்டங்களை அமைத்திருக்கிறது; அதில் குழந்தைகள் நலனுக்காக நடவடிக்கை ஒரு முக்கிய அம்சமாக அமைந்திருக்கிறது. குழந்தைகள் நலப் பணியில் ஈடுபட்டுள்ள சுயேச்சை ஸ்தாபனங்களுக்கு இந்தபோர்டு மானியங்கள் வழங்கி வருகிறது.

# தமிழகத் தொழில்வளம்

தமிழகத்தின் தொழில் வளத்துக்கும், விவசாயப் பெருக்கத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் குந்தா மின்சார நிலையத்தின் இரண்டாவது மின்சார உற்பத்தி நிலையம் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. இதனால் சென்னை மாநிலத்திற்கு 25 ஆயிரம் கிலோவாட் அதிகமாகக்கிடைக்கும்.

### மின்சாரம்

குந்தாவின் முதல் மின்சாரத் திட்டம் 40 ஆயிரம் கிலோவாட் உற்பத்தி செய்கிறது. வருகிற மார்ச்சு மாதத்தில் அதன் முழு உற்பத்தி சக்தியான 1 லட்சத்து 40 ஆயிரம் கிலோவாடை உற்பத்தி செய்யும்.

மின்சார உற்பத்திஇப்படி அபரிமிதமாக வளர்ந்து கொண்டிருக்கும் போது, பல் வேறு தொழில்களையும் ஆரம்பிப்பதுதானேநல்லது. இதை யுணர்ந்த தமிழகம் தொழில் பெருக்கத்தில் பேரூக்கம் காட்டிவருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

ஃ ஃ

அண்மையில் சென்னை, மைசூர் அரசாங்கங்களின் கூட்டு முயற்சியால், ஆம்பூருக்கு அருகில் உள்ள விண்ணமங்கலத்தில் ஒரு கம்பளி உற்பத்திச்சாலை உருவாகியிருக்கிறது. இதை நிறுவ 13·5 லட்ச ரூபாய் செலவாயிற்ரும். இந்த கம்பளி உற்பத்தி சாலை டிசம்பர் முதல் தேதி வேலை செய்யத் தொடங்கும்.

ஃ ஃ

அடுத்து, நெய்வேலியில் நிலக்கரியும் சேலத்தில் இரும்பும் கிடைக்கின்றன அல்லவா? இந்த இரு கனிப் பொருள்களையும் சேர்த்துச் சுத்தமான இரும்புத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றைச் சேலத்தில் அமைப்பது சம்பந்தமாக ஆராய்ச்சி நடத்த ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

பத்திரிகைத் தொழிலுக்கு இன்றியமையாத சாதனமாக விளங்கும் டெலிபிரிண்டர் இயந்திரத்தை நாம் இதுவரை வெளி நாட்டிலிருந்து வாங்க வேண்டியிருந்தது. சென்னையில் டெலிபிரிண்டர் இயந்திரத்தை- அதற்குரிய கருவிகளை வரவழைத்துப் பொருத்திக் கொடுக்கும் இத்தாலியக் கம்பெனி ஒன்று ஏற்கனவே இருக்கிறது.

இப்போது, டெலிபிரிண்டர் தொழிற்சாலையை அமைக்கச் சென்னைதான் சிறந்த இடம் என்பதை இத்தாலிய நிபுணர் ஒருவர் தேர்ந்தெடுத்திருக்கிருர்.இந்திய அரசாங்கத்தின் அழைப்பிற்கிணங்கவே மேற்படி நிபுணர் இந்தியாவுக்கு வந்து பல்வேறுஇடங்களைச்சுற்றிப் பார்த்துச்சென்னையைத் தேர்ந்தெடுத்தார். இத்திட்டத்திற்கு 1 கோடியே 20லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இங்கு 1964-க்குப் பின் டெலிபிரிண்டர் உற்பத்தி ஆரம்பிக்கும். இவ்வாறு டெலிபிரிண்டர்களை இங்கு உற்பத்தி செய்து கொள்வதால் 70லட்சம் ரூபாய் அந்நியச் செலாவணி மிச்சப்படும் என்று கணக்கிடப்படுகிறது.

ஃ ஃ

இந்திய சர்க்காருடன் ஒத்துழைக்க விருக்கும் பிரஞ்சு கலை நிபுணர்களும், யூனியன், ராஜ்ய சர்க்கார்களின் அதிகாரிகளும் ஒன்றுகூடி உதகையில் நிறுவப்பட விருக்கும் கச்சா பிலிம் தொழிற்சாலைக்கான மனைக்கட்டைத் தேர்ந்தெடுத்துவிட்டனர்.




இத்திட்டத்துக்கு ரூ. 8 கோடி பிடிக்குமென மதிப்பிடப்பட்டிருக்கிறது. தேசத்தின் புகைப்பட சினிமாப்பட, எக்ஸ்ரேப்படத் தேவை முழுவதையும் இத் தொழிற்சாலை பூர்த்தி செய்ய முடியும். தொழிற்சாலையில் 1962 இறுதிக்குள் உற்பத்தி துவங்குமென எதிர்பார்க்கப்படுகிறது,



### ஏழைகளின் வெள்ளி.

ஏழை மக்களின் வெள்ளி எனக் கருதப் பெறும் அலுமினியத்தால் உருவாக்கப் பெற்ற பாத்திரங்களைப் புழங்குவதால் உடலுக்குத் தீங்கு நேரிடுவதில்லை என்று இப்போது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

ஏழைமக்களின் வாழ்விலே இரண்டறக் கலந்து விட்ட அலுமினியப் பாத்திரங்களில் சமைப்பதாலும், பண்டங்களைப் போட்டு வைப்பதாலும் உடலுக்குத் தீங்கு நேரலாம் என்று இதுவரை பலரிடையே இருந்துவந்த கருத்தை இந்தப்புதிய கண்டுபிடிப்பு மாற்றி விடக்கூடும். அமெரிக்காவில், பழம் மற்றும் உணவுப் பண்டங்களைப் பக்குவப்படுத்தி அடைத்து வைக்க அலுமினியக் கேன்களையே பெரிதும் பயன்படுத்துகின்றனராம்.

### வாழ்த்துகிறோம்.

அகில இந்திய வானொலி திருச்சி நிலைய நிகழ்ச்சி அமைப்பாளர் திரு. எஸ். கந்தசாமி (துறைவன்) அவர்களின் இளவல் திரு. சங்கரமூர்த்தி (சங்கர்) பி. ஏ. க்கும் நாகர்கோயில் திரு. எம். வி. கோலப்ப ஆச்சாரி அவர்கள் புதல்வி செல்வி பொன்னம்மாள் என்ற சரஸ்வதிக்கும் 9-11-60 புதன்கிழமை வடிவீஸ்வரம் மணப்பெண் இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. புதுமணத் தம்பதிகளுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

# திரைப்படக் காமிராவின் கதை

திரைப்படத்தில் சார்ளி சப்ளினின் நகைச்சுவைமிக்க நடிப்பையும் ஒலிவ்யரின் குணசித்திர நடிப்பையும் டெமில்லியின் பிரமிப்பூட்டும் காட்சி ஜோடனைகளையும் காணும்போது, நாம்மகிழ்ச்சியடைகிறோம். அற்புதமான இந்தப் படங்களைத் தயாரித்ததிரைப்படக் காமிரா ஓர் விஞ்ஞானக் கருவி என்பதையே மறந்துவிடுகிறோம்.

மேரே என்ற பிரஞ்சு உடற்கூறு விஞ்ஞானி, மிருகங்களுடையதசைகள் இயங்குவதைப் பற்றி 1894 ஆம் ஆண்டில் ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தார். ஒரு பூனை தாவும்போது கால்களைத்தான் பூமியில் வைத்து இறங்குகிறது என்பதை விளக்குவதற்காக, அவர் பல கோணங்களில், அந்த அசைவுகளை விளக்கும் முறையில் படங்களைத் தொகுத்தார். அவருடைய முயற்சி பிற்காலத்தில் திரைப்படக் காமிராவை உருவாக்க உதவிற்று.

மேரேயின் சித்தாந்தத்தைக் கவனித்த சிலர் பொழுதுபோக்க, அசையும் படங்களை சிறந்த சாதனமாகப் பயன்படுத்த முயன்றார்கள். முயற்சி வெற்றியடைந்ததால் அவர்கள் அபிவிருத்திகளைச் செய்து, கலையம்சமுள்ளபொழுதுபோக்கு நிகழ்ச்சிகளைத் தயாரிப்பதில் கவனம்செலுத்தலானார்கள். மக்கள் இருக்குமிடத்தை இருட்டித்துவிட்டு திரையில் ஒளி பாய்ச்சிப் படங்களைக் காட்டலானார்கள்.

திரைப்படக் காமிராவைக் கொண்டு விஞ்ஞானப்புதிர்களுக்கு விடைகாண்பதில் ஆராய்ச்சியாளர்கள் கவனம் செலுத்திவந்தார்கள். திரைப்படக் காமிராவை வேகமாக முடுக்கியும் மெதுவாக ஓட்டியும் பலப்பல படங்களை எடுத்திருக்கிறார்கள். உதாரணமாக ஓர் ஈயின் இறக்கை அசைவுகளைக் காட்டுவதற்காக, வேகத்தைத் தணித்துக் காட்டும் உத்திமுறையைக் கையாளுகிறார்கள். முட்டையிலிருந்து குஞ்சு வெளிப்படுவதை ஒரே நிமிஷத்தில் விவரிப்பதற்காக வேக உத்திமுறையைக் கையாளுகிறார்கள்.

### மனோவசியப் படம்

வளர்ந்துவரும் திரைப்பட வரலாற்றிலே மகத்தான மாறுதல்களும், வளர்ச்சியும் ஏற்பட்ட வண்ணமே உள்ளன. 'மணக்கும் படம்' – கண்டுபிடித்தான பிறகு இப்போது மனோவசியப் படம் ஒன்றை உருவாக்கும் பெரு முயற்சியில் மேனாட்டார் வெற்றி கண்டுவிட்டார்கள்.

இப்போது, மனோவசிய முறையில் காட்சிகளை அமைத்துப் படமெடுக்கலாமாம். மனோவசியம் செய்பவராக நடிப்பவர் திரையிலே தோன்றி, 'எங்கே உங்கள் கைகளைக் கட்டிக் கொள்ளுங்கள்' என்று படம் பார்க்கிறவர்களைப் பார்த்துச் சொன்னால், ரசிகர்கள் தங்களை மறந்து கையைக்கட்டிக் கொள்வார்களாம். 'எழுந்திருங்கள்' 'உட்காருங்கள்' என்று எதைக் கூறினாலும் அப்படியே செய்வார்களாம். படத்தில் வரும் மனோவசியக்காரர் பாடச் சொன்னால் ரசிகர்கள் பாடுவார்களாம்– தாளம் போடச் சொன்னால் தாளம் போடுவார்களாம்.

இந்தப் புதிய முறைப்படத்தை உருவாக்கி வெற்றி பெறுவது எளிதானதே என்று ஒரு பட நிறுவனத்தின் பிரதிநிதி கூறியுள்ளார்.

# கடல் கன்னிகள்

ராமேசுவரத்தை அடுத்த "மண்டபம்" என்ற இடத்தில் 2 'கடல் கன்னிகள்' பிடித்துவைக்கப்பட்டு இருக்கிறது. இதை சமீபத்தில் ஏராளமானவர் போய்ப் பார்த்துவிட்டு வருகின்றனர்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இந்த "கடல் கன்னிகள்" பிடிபட்டன. மண்டபத்தில் உள்ள சர்க்கார் மீன் இலாகா ஆராய்ச்சி நிலையத்தில் இப்பொழுது வைக்கப்பட்டு இருக்கின்றன. பாம்பன் கடலில் அகப்பட்டவை, இவை.

கண்ணாடித் தொட்டி கட்டி, அதில் நீந்தவிட்டு இருக்கிறார்கள். ஒரு "கடல் கன்னி" க்கு ராணி என்றும், இன்னொன்றுக்கு ராஜா என்றும், மந்திரி திருமதி லூர்தம்மாள் பெயர் வைத்தார்.

தமிழ்நாட்டில் இருந்தும், வடநாட்டில் இருந்தும் மாணவ–மாணவிகளும், மற்றவர்களும் நாள்தோறும் வந்து அதிசயமாக பார்த்துப் போகிறார்கள்.

"கடல் கன்னி" என்றால், கடலில் வாழும் பெண் என்று நினைக்கிறார்கள். இப்படியே பல பல கதைகளும் இருக்கின்றன. மார்பு வரை பெண் ஆகவும், அதற்குக் கீழே மீன் உருவிலும் இருக்கும் என்றும் சொல்வார்கள். படம் போட்டும் காட்டுவார்கள். ஆனால், இது எல்லாம் தவறு ஆகும். "கடல் கன்னி" என்பது பெண் அல்ல. கடலில் வாழும் சாதாரண ஒரு மீன்தான்.

திமிங்கலம் இனத்தைச் சேர்ந்தது; "கடல் கன்னி" 7 அடி ... அகலமும் இருக்கும். 60 ஆண்டு வரை வாழும். சாதாரணமாக மீன்கள் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும். ஆனால் "கடல் கன்னி" குட்டி போட்டு, பால் கொடுக்கும். ஆகவே இதை "கடல் பசு" என்றும் அழைப்பார்கள்.

சிறிய மீன்களைப் பிடித்துத் தின்பதற்காக இது கரை ஓரத்தில் வரும். மங்களூர் பக்கத்தில் "கடல் கன்னி" களை மீனவர்கள் சாப்பிடுகிறார்கள். ஆனால், தமிழ் நாட்டில் "கடல் கன்னி" யை கடவுள்போலக் கருதுகிறார்கள்.

"கடல் கன்னி" யின் தோல், எருமைத் தோல் போல இருக்கும். வெளி நாடுகளில் இந்தத் தோலில் இருந்து "மணிபர்ஸ்" பை முதலியவை செய்கிறார்கள்.



### மூளை நோய்க்குப் புதிய சிகிச்சை

மூளை, நரம்பு சம்பந்தமான சில தீராத நோய்களுக்கு ரஷ்ய வைத்ய நிபுணர்கள் ஒரு புதிய சிகிச்சை முறையைக் கண்டுபிடித்திருக்கின்றனர்.

மூளையின் உள்ளே மெல்லிய குழாயைச் செலுத்தி அதன் வழியாக மதுசாரத்தை விட்டு நோய் நரம்புக் கிருமிகளை அழிப்பதே இந்தப் புதிய சிகிச்சைமுறை. இம் முறையால் 70 க்கும் அதிகமான ஆபரேஷன்கள் வெற்றியுடன் செய்யப்பட்டிருக்கிறதாம். நோயின் ஆரம்பக்கட்டத்திலேயே இந்தச் சிகிச்சை மூலம் பூரண சுகத்தை எதிர்பார்க்க முடியுமாம்.



# செய்திக் கோவை

## கரூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி

நவம்பர் 4ந் தேதி நடைபெற்ற காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், கரூர் தாலுகாவில் பருவ மழை தவறியதின் காரணமாக 1370ம் பசலிக்கு வரி வசூலைத் தள்ளுபடி செய்யும்படியும், புலியூர் மண்டலக் காங்கிரஸ் கமிட்டி அமைப்பதெனவும், மின்னும் பள்ளி—கவுண்டன் பாளையம் ரோடு சீரமைப்பு சம்பந்தமாக ஜில்லா போர்டு விசேஷ அதிகாரியைக் கேட்டுக் கொண்டும், கரூர் தாலுகாவில் விநியோகிக்கப்படும் ரசாயன உரங்களின் அளவை அதிகப்படுத்தித் தருமாறு மாவட்ட கலெக்டரைக் கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

★

## ஜெகவீர பாண்டியனுர் பாராட்டுவிழாக் குழு

மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பொதுக்கூட்டம் 7-11-60 ல், சங்கத்தலைவர் திரு ல. கிருஷ்ணசாமி பாரதி, எம். ஏ. பி. எல்., தலைமையில் பாரதி இல்லத்தில் நடைபெற்றது. தமிழகத்தின் மூது பெரும் புலவரும், தலைசிறந்த கவிஞரும், "திருக்குறட் குமரேச வெண்பா" "புலவர் உலகம்," "தரும தீபிகை," "வீர பாண்டியம்" ஆகிய உயர்ந்த பல பெரு நூல்களின் ஆசிரியருமான கவிராஜ பண்டித திரு. ஜெகவீர பாண்டியனுர்க்குச் சீரிய முறையில் பாராட்டு விழா நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. திரு ஜெகவீரபாண்டியனுரின் அருமை பெருமைகளைப் பற்றித் தலைவரும் 'புலவர்மணி' வி. ஜி. சீனிவாசன், பி. ஏ., எல். டி. 'பண்டித மணி' தி. கி. சுந்தரமூர்த்தி, முகவை மகாவித்துவான் வி. கே. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், வித்துவான்களான வீ. ப. கடராஜன், தே. ராஜகோபாலன், மூ. சதாசிவம் ஆகியோரும் பேசினர்கள். தமிழ்நாட்டிலுள்ள தமிழன்பர்கள் பலர் கொண்ட 'பாராட்டுவிழாக் குழு' அமைக்கப் பெற்றது. அதனின்றும், பெருந்தொகை தரவல்ல பத்துப் பேர்கள் கொண்ட 'புரவலர் குழு' வொன்றும் அமைக்கப்பட்டது. செயலாளர் திரு. வி. ஜி. சீனிவாசன் நன்றி நவில கூட்டம் இனிதே நிறைவெய்தியது.

★

## அரசாங்கத் தொழில் துறைத் தேர்வு

அரசாங்கத் தொழில்துறை சம்பந்தமான தேர்வுகளில் கலந்து கொள்வோருக்குத் தேவையான செய்திகள் ஃபோர்ட் செயிண்ட், ஜார்ஜ் கெஜட் (2-11-60) டில் 3-வது செக்ஷனில். 3-வது பிரிவில் அறிவிக்கப்பட்டுள்ளன. இந்திய இசை, நாட்டியம், ஓவியம், அச்சுக்கலை, புக்பைண்டிங், டைப்ஃபவுண்டிங், தையற்கலை முதலிய பாடங்களில் நவம்பர் 15 ந் தேதி துவங்கி, டிசம்பர் 7ந் தேதி முடிய, தேர்வுகள் நடக்கும். இது பற்றி மேற்கொண்டு தகவல் தெரிந்து கொள்ள விரும்புவோர் மேற்படி கெஜட்டைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

★

## குழந்தை உணவு தயாரிப்பு நிலையம்

குழந்தைகளுக்கான உணவும் பால்கட்டியும் தயாரிப்பதற்கான முதல் தொழிற்சாலையை அக்டோபர் 31-ந் தேதி பம்பாயைச் சேர்ந்த ஆனந்த் என்னுமிடத்தில் மத்திய நிதிமந்திரி, திரு மொரார்ஜி தேஸாய் ஆரம்பித்து வைத்தார். இந்நாட்டின் உணவுப் பொருள் தயாரிப்புத் தொழிலில் இது ஒரு முக்கியமான முன்னேற்றமாகும். மைசூரில் உள்ள மத்திய உணவுநுட்ப ஆராய்ச்சி நிலையத்தின் விஞ்ஞானிகள், ஆனந்தில் உள்ள கைரா பால் உற்பத்தியாளர் கூட்டுறவுச் சங்கம் ஆகியோரின் கூட்டு முயற்சியில் இந்தத் தொழிற்சாலை ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. இந்தத் தொழிற்சாலையில் "அமூல குழந்தை உணவு(AmulInfant Food) என்ற பெயரில் நாளொன்றுக்கு 11 டன் வீதம் குழந்தைகளுக்கான உணவு தயாரிக்கப்படும். குழந்தைகள் உணவுப் பொருள்கள் இதனால் தாராளமாகக் கிடைக்கலாம்.



### அமுத வாக்கு

செல்வம் இனிது. அது முயற்சியினுல் சேர்க்கப்படுவது. தீயது செய்தாலன்றிப் பொருள்தேட முடியாதென்று மூடர்கள் நினைக்கிறார்கள்.



## இராஜேந்திரம் பஞ்சாயத்துத் தலைவர்

இராஜேந்திரம் பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தல் தண்ணீர்ப்பள்ளியில் நடைபெற்றது என்றும், தண்ணீர்ப்பள்ளி இளைஞர் காங்கிரஸ் செயலர் திரு. சீரங்கன் தேர்ந்தெடுக்கப் பட்டார் என்றும் திரு. எஸ். பி. சுப்பிரமண்யம் தெரிவிக்கிருர்.



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 26] 13—11—1960 [வாரம் 2

# முன்னறிவிப்பு

திருடியவன் ஓடுகிறான்; திருட்டுக் கொடுத்தவன் விரட்டுகிறான். திருடனோ தன்னை விரட்டிக்கொண்டு வருகிறவன் மீதே திருட்டுக் குற்றம் சுமத்துகிறான். இன்றையச் செஞ்சீனத் தலைமையமைச்சர் சூ-யென்-லாயின் செயல் இப்படித்தான் இருக்கிறது.

எல்லைத் தகராறு விஷயமாகப் புதுடில்லியில் இந்தியத் தலைமை அமைச்சரும் செஞ்சீனத் தலைமை அமைச்சரும் பேசிய பேச்சு இருவருக்குமே திருப்தியின்றி முறிந்தது. 'நாம் நமது எல்லைகளைத் தெளிவாக வரையறுத்துக் கூறியதுபோல பேச்சு வார்த்தைகளின்போது ஒரு தடவைகூட சீனா தனது எல்லைகளைத் தெளிவாகக் கூறவில்லை' என்று இந்தியத் தலைமை அமைச்சர் நேருஜி கூறினார். அதன் பிறகு அண்மையில் நடைபெற்ற பேச்சு வார்த்தையும் பயனற்ற நிலையில், திருட்டுக் கொடுத்தவன் மீதே திருட்டுக் குற்றம் சுமத்தும் திருடன்போல ஆகியிருக்கிறார் சீனத் தலைமையமைச்சர்.

இந்தியாவுக்குச் சொந்தமான சுமார் 50 ஆயிரம் சதுரமைல் பரப்புள்ள பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டு, நிலத்தைப் பறிகொடுத்த நாம் நெஞ்சம் பதறிக்கொண்டிருக்கும் நேரத்திலே எங்கள் பகுதிகளை இந்தியா பிடித்துக் கொண்டிருக்கிறது என்றும், சீனாவுக்குச் சொந்தமான பெருநிலப் பரப்பை இந்தியா வைத்துக்கொள்ள விரும்புகிறது என்றும், எல்லைப் பிரச்னை விஷயத்தில் உடன்பாட்டுக்குவர இந்தியா மறுப்பதோடு சீனாவுக்கு எதிராகவும் அது பிரசாரம் செய்கிறது என்றும் அடுக்கடுக்காகக் குற்றஞ்சாட்டுகிறார். விளையாடுவதற்கு வேறு இடம் இருந்தும் அரசியலை விளையாட்டரங்கமாக்கி, வேடிக்கைப் பேச்சுப் பேசி, ஏற்கனவே வெந்துபோயிருக்கும் நமது உள்ளங்களிலே மேலும் வெந்தணலை அள்ளிவீசுகிறார் சீனப் பிரதமர்.

இந்திய மக்களுக்கு நாட்டுப்பற்று உண்டேதவிர நாடுபிடிக்குமாசைநிச்சயமாகக்கிடையாது. இதுஉலகறிந்த உண்மை. சீனாவுக்கு நாட்டாசை எல்லைமீறியுள்ளது; எனவே, எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் தனது ராணுவ பலத்தைப் பெருக்கி, முடிந்தவரை 'உரிமை' யும் கொண்டாடிவருகிறது. இதுவும் நாடறிந்த விஷயம்.

உண்மையிலேயே சீனாவின் எல்லையில் ஒரு சதுர அங்குலத்தையாவது இந்தியா பிடித்துக்கொண்டிருக்குமானால் சீனத் தலைமையமைச்சர் பேசவா செய்வார்? பெரும் உலகப்போரையே கிளப்பியிருப்பாரே. மேலும், இந்தியா தனக்குச் சொந்தமான பெரும் நிலப்பரப்பைச் சீனாவிடம் பறிகொடுத்த நிலையிலும், ஐ. நா. சபையில் சீனாவுக்கு இடம் பிடிக்கும் முயற்சியில் பெரிதும் ஆர்வமும் அக்கறையும் காட்டுகிறதென்றால், பகைவனுக்கு அருளும் பாரதப் பண்பே தவிர வேறில்லை. இதை உணராமல் தான் செய்திருக்கும் பெருந்தவறை மறைப்பதற்காக இந்தியாவின் மீது இல்லாததும் பொல்லாததும் பேசிப் பழி சுமத்துவது நன்றிகெட்ட செயலாகும்.

சீன-நேபாள சீன-பர்மிய எல்லைத் தகராறுகளை இந்திய சீன எல்லைத் தகராறோடு ஒப்பிட்டுப் பேசுவது புத்திசாலித்தனமல்ல. அவற்றோடு இந்திய சீன எல்லைத் தகராறை ஒப்பிட்டுப்பேசி, இந்தியாவின் மீது பழிசுமத்த சீனப்பிரதமர் முற்படுவாரானால், 'கேடுவரும் பின்னே; மதி கெட்டுவரும் முன்னே' என்ற சொற்றொடரைத்தான் நாம் அவருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

★

# திரு. காமராசர் பேச்சு

ஆட்சிக்கலையும் ஆளும் திறனுமிக்க முதலமைச்சர் காமராசர் அவர்கள் பேச்சுக்கள் சிறந்து விளங்குவதற்குக் காரணம் அவர் உள்ளத்திலே உண்மையொளி இருக்கிறது. எனவே அவரது பேச்சும் சிறக்கிறது; இனிமை பயக்கிறது.

அவர் ஆங்காங்கே பேசுகிற பேச்சுக்களையும், அவ்வப்போது வெளியிடுகிற கருத்துக்களையும் தொகுத்து நூலாக வெளியிடுவது பயனுள்ள சிறந்த பணியாகும். அத்தகைய இருதொகுப்பு நூல்களை 'நாமார்க்கும் குடியல்லோம்' – 'புதிய சமுதாயம்' என்ற தலைப்பில் சென்னை நிருபர்கள் சங்கம் வெளியிட்டுப் பெருமை தேடிக் கொண்டிருக்கிறது.

மத்திய அமைச்சர் திரு. ப. சுப்பராயன் இரு நூல்களையும் வெளியிட்டு, முதலமைச்சரின் பெருமையையும் திறமையையும் விளக்கிப் பேசினார். நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் [illegible] அரங்கில் நடைபெற்ற இவ் விழாவில், டாக்டர் அ. சிதம்பரநாதன், விடுதலை ஆசிரியர் எஸ். குருசாமி ஆகியோரும் கலந்து கொண்டனர்.

நூல்களின் தொகுப்பாளர் திரு. எம். நமசிவாயம் பாராட்டுக்குரியவர்.

## திராட்சை பறிக்கும் இயந்திரம்

நியூயார்க்மாநில வேளாண்மைக் கல்லூரி, திராட்சை பறிக்கும் யந்திரம் ஒன்றை அமைத்துள்ளது. ஒரு ஏக்கர் நிலப்பரப்பில் உள்ள திராட்சையை சுமார் மூன்றிலிருந்து ஐந்து டன் திராட்சையை ஒருமணி நேரத்தில் பறிக்க வல்லது அது. அனுபவமிருந்த ஒரு நபர் நாள் ஒன்றுக்கு ஒரு டன் திராட்சைதான் பறிக்க முடியும். இந்தப் புது யந்திரம் இரண்டு பேர்களினால் இயக்கப்படுகிறது. பெட்ரோல் மூலம் விசை பெறுகிறது. திராட்சைக் கொடிகளிலிருந்து இந்தயந்திரம் திராட்சைகளை அதிர்ச்சி தரும் கம்பிகளைக் கொண்டு ஒரு பட்டைக்குள் உதிர்க்கிறது. பட்டை திராட்சையை ஒரு பாத்திரத்தில் கொட்டுகிறது.

## சென்றவாரம்

# திருச்சி நகரிலே

திருச்சி விமான நிலையத்தில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள கட்டிடத்தை இந்திய அரசாங்க விமானப் போக்குவரத்துத் துணையமைச்சர் ஜனாப் அஹமத் மூகைதீன் திறந்துவைத்து திருச்சியின் சிறப்பியல்புகளைப்பற்றிக் குறிப்பிட்டார். அவர் ஆற்றிய திறப்புரையில், திருச்சி நகரம் வரலாற்றுச் சிறப்புடையதென்றும், சிறு தொழில் நிலையங்கள் உள்ள முக்கிய நகரமான திருச்சியில் உள்ள விமான நிலயத்திற்கு இம் மாதிரிக் கட்டிடம் தேவைதான் என்றும் கூறி அழகாகவும், வசதியாகவும் கட்டிடத்தை உருவாக்கிய தொழிலாளர்களைப் பாராட்டினார். விமானப் போக்குவரத்தால் நஷ்டமே ஏற்பட்ட போதிலும், பொதுமக்களின் வசதிக்காக மேற்படி போக்குவரத்தை அரசாங்கம் நடத்தி வருவதாக அவர் சொன்னார்.

இதன் பிறகு திருச்சி மலைக் கோட்டையில் உள்ள நத்தர்ஷா பள்ளி வாசலுக்குச் சென்று சமாதிக்கு மாலைபோட்டு மரியாதை செலுத்தினர். திருச்சி மாவட்ட கலெக்டர் குலாம் முகம்மது பாட்சாவும் வேறு பலரும் இதில் கலந்துகொண்டனர்.



மக்கட்பணியே மகேஸ்வரன் பணி என்பதை யுணர்ந்து அறிவுப் பணியும் அருள் நெறிப் பணியும் ஆற்றிவரும் அருள்திரு குன்றக்குடி அடிகளாருக்கு திருச்சி அருள் நெறித்திருக் கூட்டத்தினரால் மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் ஒரு பாராட்டு விழா ஏற்பாடு செய்யப்பட்டது. அடிகளாரின் சேவையையும், செந்தமிழ்ப் பற்றையும் பாராட்டி, அவருக்கு வெள்ளியால் செய்யப்பெற்ற மலைக்கோட்டைச் சின்னம் ஒன்று பரிசாக வழங்கப் பெற்றது.

மக்கள் முன்னேற்றத்திற்கு அவசியமானது மதமா அரசியலா என்பது குறித்து அடிகளார் தலைமையில் தேவர் மன்றத்தில் நடைபெற்ற விவாத அரங்கில், பேராசிரியர்கள் சி. எஸ். கமலபதி, கோ. சுப்பிரமணியபிள்ளை ஆகியோரும் வேறு பலரும் கலந்து கொண்டனர். இறுதியில், மதம் தான் அவசியம் என்பதை வலியுறுத்திப் பேசித் தமது தீர்ப்பை வழங்கினார் குன்றக்குடி அடிகளார்.



அ.இ. வானொலி திருச்சி நிலைய நிகழ்ச்சி அமைப்பாளர் திரு. எஸ். கந்தசாமி (துறைவன்) எழுதிய திருந்திய உள்ளம் என்ற சமூக நாடகத்தை ஸ்ரீரங்கம் ரயில்வே ஊழியர் சங்கத்தினர், திருச்சி தேவர் மன்றத்தில் நவம்பர் 5-ந் தேதி சிறப்பாக நடித்துக் காட்டினர்.

உணர்ச்சிகரமான கதையமைப்பு — கருத்தும் சுவையும் நிறைந்த வசனங்கள். நடிகர்கள் அத்தனைபேருமே, குறை கூற முடியாதபடி தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பாத்திரங்களோடு ஒன்றி உணர்ச்சியோடு நடித்தார்கள். குமாரி டபிள்யூ. எஸ். சந்திரா, பேபி ரோசலின் ஆகியோரின் நடன நிகழ்ச்சி சிறப்பாக அமைந்திருந்தது. இசையமைப்பும் பின்னணியும் குறிப்பிடத் தக்கவகையில் அமைந்திருந்தன. கட்டபொம்மனைப் போல, பேசிக்காட்டிய சிறுவனின் நடிப்பும் பேச்சும் அபாரம். 'திருந்திய உள்ளம்' நாடகம் பார்த்தவர்கள் அத்தனை பேருமே திருப்தியான உள்ளத்தோடுதான் தேவர் மன்றத்தை விட்டு வெளியேறி வந்தார்கள் என்றால் அதிகம் கூறுவானேன்?



திருச்சி தெப்பக்குளத்திற்கு அருகாமையில் உள்ள வாணப்பட்டறை வீதியில் காமராஜர் படிப்பக ஆண்டுவிழாவையொட்டி நகர காங்கிரஸ் கமிட்டித் தலைவர் டாக்டர் வி. கே. ரங்கநாதன் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், காங்கிரஸ் இன்று செய்துவரும் பணிகளையும், அதை வளர்க்கவேண்டியதன் அவசியத்தையும், எதிர்க்கட்சிகளின் பொய்ப் பிரசாரங்களையும் சட்டசபை அங்கத்தினர் திருமதி அனந்தநாயகி, டாக்டர் செங்கல்வராயன், டி. பி. ஜெகநாதன் ஆகியோர் தெளிவாக விளக்கினார்கள்.



ஐக்கிய அரேபியக் குடியரசில் இந்தியாவின் தூதராக இப்போது இருந்துவரும் ஜனாப் முகம்மது அகீம் உசேன் லெபனானில் இந்திய ஸ்தானிக மந்திரியாகவும் நியமிக்கப்பெற்றிருக்கிறார். இவர் இரண்டு பொறுப்புகளையும் வகித்து வருவார்.







ஆஸ்பத்திரியில் குழந்தைகள் வார்டில் குழந்தைகள் பொம்மைகளைவைத்து விளையாடிக்கொண்டிருக்கின்றன.

# உலகைச் சுற்றி.....

அமெரிக்காவின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற திரு. கென்னடி ஆண்டுதோறும் 5 லட்ச ரூபாய் சம்பளம் பெறுவாராம். இது தவிர அவருடைய வேலை சம்பந்தமான செலவுகளுக்கு ரூ. இரண்டரை லட்சமும், போக்குவரத்துச் செலவுக்கு இரண்டு லட்சமும் கொடுக்கப்படுமாம். புதிய ஜனாதிபதிக்குப் பழைய ஜனாதிபதி வழங்கிய வாழ்த்துச் செய்தியில் பதவியைக் கென்னடியிடம் ஒப்படைக்க முழு அளவில் ஒத்துழைப்பதாகவும், உலகம் முழுவதும் சுதந்திரம் தழைத்து ஓங்கப் பாடுபடுவேன் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். அதுதான் நேர்மையும் நியாயமும் மனிதத் தன்மையுமாகும்.

அடுத்து, ரஷ்யப் பிரதமர் வழங்கியுள்ள வாழ்த்துச் செய்தியில், ரஷ்ய அமெரிக்க உறவு மேலும் வளர்ந்தோங்க வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார். இதுவரை குருஷேவும், ஐக்கும் ஒருவருக்கொருவர் கீரியும் பாம்புமாகவே இருந்து வந்திருப்பது உலகப் பிரசித்தம். 'புதிய உறவு' எப்படி ஏற்படுகிறது—எப்படி வலுப் பெறுகிறது என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

கென்னடியின் வெற்றிக்கு வாழ்த்தனுப்பியவர்களை மட்டுமே கூறிக் கொண்டுபோனால், செய்தி முழுமை அடையாது. தேர்தல் முடிவுகள் வெளியாகிக் கொண்டிருந்தபோது, நிக்சன் குடியரசுக் கட்சிச் சார்பில் அளித்த பேட்டியொன்றில், கென்னடிதான் வருவார் போலிக்கிறது என்று கூறிய உடனேயே நிக்சனின் மனைவி விக்கி விக்கி அழுதாராம். என்ன பதி பக்தி!

★

சோவியத் பிரதமர் குருஷேவைப் பதவியிலிருந்து நீக்கி, முன்னாள் பிரதமர் மலங்கோவ் மீண்டும் பிரதம மந்திரியாகிவிட்டார் என்று ஒரு புரளி கிளம்பியது; மாஸ்கோ இந்தப் புரளியைக் கேட்டுப் பெரும் வியப்பு அடைந்தது.

வதந்தி கிளம்பிய மறுநாள் சீனாவின் ஜனாதிபதி தலைமையில் மாஸ்கோவுக்குப் போன கம்யூனிஸ்ட் தூதுக் குழுவினரை விமான நிலையத்தில் குருஷேவே போய்—அதுவும் ரஷ்யாவின் பிரதமராகவே சென்று வரவேற்றிருக்கிறார்.

மேற்படி புரளிபற்றி குருஷேவ் குறிப்பிட்டதாக வெளியாகியிருக்கும் செய்தி, குருஷேவின் நெஞ்சழுத்தத்தையும், அவர் எத்தகைய கிண்டல் பேர்வழி என்பதையும் தெளிவாக உணர்த்துகிறது. அது மட்டுமல்ல, அவர் எவ்வளவு பெரிய புரளியை எவ்வளவு ரத்தினச் சுருக்கமாகத் தூளாக்கி விட்டார் பாருங்கள். அவர் கூறியதுஇதுதானாம்: 'நான் இங்குதான் இருக்கிறேன்.'

★

இந்திய விமானப்படையின் பிரதம அதிகாரி ஏர்மாஷல் முக்கர்ஜி நவம்பர் 9உ காலை டோக்கியாவில் மரணமடைந்தார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம். ஏர் இந்தியா ஆரம்பப் பயணத்திற்காக ஜப்பானுக்குச் சென்றிருந்த முக்கர்ஜி, ஜப்பானிய ஹோட்டல் ஒன்றில் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, மாமிசத் துண்டம் ஒன்று மூச்சுக்குழாயில் சிக்கி மரணமடைந்தார் என்று சொல்லப்படுகிறது.

★

அக்டோபர் புரட்சிதின ஆண்டு விழா அண்மையில் மாஸ்கோ செஞ்சி சதுக்கத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இதையொட்டி ரஷ்யாவின் ஆயுத பலத்தைக்காட்டும் பல ராக்கெட்டுகளும் அவைகளை இயக்கும் படைகளும் கொண்ட மாபெரும் அணிவகுப்பு ஒன்றும் நடைபெற்றது. ரஷ்ய பாதுகாப்பு அமைச்சர் பேசுகையில் ஏகாதிபத்ய வாதிகளுக்கு எச்சரிக்கை விடுத்தார்.

★

பார்மோசாவில் அமெரிக்கா படைகளை வைத்திருக்கின்றது. இந்தப் படைகளை அமெரிக்கா வாபஸ் பெறுதவரை சீன–அமெரிக்க உறவில் அபிவிருத்தி ஏற்படுவதற்கில்லை என்று பி.பி.சி. டெலிவிஷன் பேட்டியில் சீனப் பிரதமர் சூ. என் லாய் குறிப்பிட்டார்.

உலக நாடுகளில் வல்லமை மிகுந்த ஒரு நாடாக சீனா வளர்வதாக மேற்கத்திய நாடுகள் கருதுவது தவறு என்றும், சோஷலிஸ்ட் நாடுகளான சீனாவும், ரஷ்யாவும் கொள்ளும் பரஸ்பர உறவைக் கண்டே மேற்கத்திய நாடுகள் அஞ்சுகின்றன என்றும் சீனப் பிரதமர் குறிப்பிட்டார்.

## இரத்தக்கொதிப்புக்கு மருந்து

1 தோலா அசல் தேன், 1 தோலா பசு நெய் 1 தோலா பசுப் பால் 1 தோலா சீனாக் கற்கண்டு பொடி, அரைக்கால் தோலா குங்குமப்பூ இவைகளை ஒன்றாகக் கலந்து உணவிற்கு முன்பு காலை 6 மணிக்கு 60 நாட்கள் வரை உட்கொண்டு வந்தால்ரத்தக்கொதிப்பு நோய் குணமடையும்.

இஞ்சி புதினச்சாறு வகைக்கு 1 தோலா வீதம் அரைக்கால்படி பசும் பாலில் சேர்த்து சர்க்கரை கலந்து காலை மாலை 60 நாட்களுக்கும் விடாமல் உட்கொண்டு வரவேண்டும். பழத்தினுசுகள் அதிகமாகச் சேர்த்துக்கொள்க.

வெள்ளாட்டு இறைச்சி மட்டும் வாரத்திற்கு ஒரு முறை சேர்த்துக் கொள்ளலாம். புளிக்குப் பதிலாக எலுமிச்சம் பழமும் உப்புக்குப் பதிலாக இந்துப்பும், கடுகு எண்ணெய் தாளிப்புக்குப் பதிலாக சீரகம் வெங்காயம் பசு நெய் தாளிப்பும் சேர்த்துக் கொள்ளலாம்.

அமெரிக்காவின்

# புதிய தலைவர் கென்னடி

அமெரிக்க உள் நாட்டு வெளி நாட்டுக் கொள்கைகளில் ஒரு புதிய திருப்பம் ஏற்படுமா அல்லது மீண்டும் பழைய கருப்பனே கருப்பன் என்ற முறையில் போய்க் கொண்டிருக்குமா என்ற எண்ணத்தில் மக்கள் பெரிதும் எதிர் பார்த்துக்கொண்டிருந்த அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சி அபேட்சகரான திரு. கென்னடி தேர்ந்தெடுக்கப் பெற்றார். எட்டு ஆண்டுகள் தொடர்ந்தாற்போல் ஆட்சியில் இருந்து வந்த குடியரசுக் கட்சியினரிடமிருந்து இப்போது ஆட்சிப் பொறுப்பு மாறியிருக்கிறது. இந்த மாற்றத்தால் அமெரிக்காவின் கொள்கையில் ஒரு புதிய திருப்பம் ஏற்படலாம் என்று பலரும் கருதுகிறார்கள்.

43 வயதான திரு. கென்னடி ஜனவரியில் புதிய ஜனாதிபதியாகப் பதவியேற்பார்.

இந்தத்தேர்தல் முடிவு குறித்து மாஸ்கோ ரேடியோ அறிவிக்கையில், திரு. நிக்சனை அபேட்சகராக நிறுத்திய ஐசனோவர்—நிக்சன் நிர்வாகத்திற்கு இது ஒரு மகத்தான தோல்வி என்று குறிப்பிட்டது. அமெரிக்காவைப் பொறுத்தவரை மாஸ்கோவின் கண்ணோட்டம் வேறு; நமது கண்ணோட்டம் வேறு. ஆசியாவிலேயே கம்யூனிசத்திற்கு எதிரான பலம்வாய்ந்த அரண் இந்தியாதான் என்பதை நிக்சன்—கென்னடி ஆகிய இரு கட்சியினருமே உணர்ந்திருக்கிறார்கள். இந்தியாவின் நல்வாழ்வு பின் தங்கிய நாடுகளுக்கு நல்லதோர் எடுத்துக் காட்டாக விளங்கும் என்பதை அவர்கள் இருவருமே உணர்ந்திருக்கிறார்கள். எனவே, இந்தியாவை இருவருமே அனுதாபத்துடன்தான் கவனித்து வருகிறார்கள். ஆதலின் தோற்றவருக்கு அனுதாபத்தையும் வெற்றி பெற்றவருக்கு நமது வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்வதே சரியானது.

ஜனாதிபதி மாற்றத்தின் காரணமாக, லிண்டன் ஜான்ஸன் உப ஜனாதிபதியாக வருவார் என்று எதிர்பார்க்கலாம். அவர் ஜனநாயகக் கட்சித் தலைவர்களில் ஒருவர்.

## வாழ்க்கைக்குறிப்பு

திரு. கென்னடி அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள இந்த நேரத்தில் அவரைப் பற்றிய சிறு வாழ்க்கைக் குறிப்பை நாம் அறிந்து கொள்வது நல்லதல்லவா?

20-ம் நூற்றுண்டில் பிறந்த முதல் அமெரிக்க ஜனாதிபதி எனப் பாராட்டப் பெறும் கென்னடி ப்ரூக்லின் நகரில் 29-5-1917-ல் ஒரு பணக்கார வியாபாரியின் மகனாகப் பிறந்தார். பொது, தனியார் பள்ளிகளில் பயின்று, 1940-ல் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தின் சிறப்புப் பட்டதாரியானார். 1941-ல் இவர் அமெரிக்கக் கடற் படையில் சேர்ந்தார். தெற்கு பசிபிக் பகுதியில் பாட்ரோல்-டார்பிடோ கப்பல் தளபதியாகப் பணி புரிந்தார். தலைமைக்காகவும், தீரச் செயல்களுக்காகவும் சிறப்புக்கள் பெற்றார்.

போருக்குப் பிறகு சில காலம் இண்டர் நேஷனல் நியூஸ் சர்வீஸ் நிருபராகப் பணியாற்றினார். பின்னர் மாஸாசூசெட்ஸ் மாநிலத்திலிருந்து அமெரிக்கப் பிரதிநிதிகள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1948-50ல் மீண்டும் தேர்ந்தெடுக்கபெற்றார். வாழ்க்கை வரலாற்று நூல் எழுதியமைக்காக புலிட்சர் பரிசு பெற்றார். மீண்டும் இருமுறை செனட்டராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

1953-ல் ஜாக்கலின் லீ போவீர் என்ற பெண்மணியை அவர் மணந்து கொண்டார். இப்போது அவருக்கு 3 வயதான கரோலின் என்ற ஒரு பெண் குழந்தை இருக்கிறது.

குஷ்டரோகம்

## பரம்பரை நோயுமல்ல தீராததுமல்ல

நாம் நம்பாத காரணத்தால் உண்மை இல்லையாகி விடாது; நாம் நம்புகின்ற காரணத்தாலேயே பொய்மை மெய்ம்மையாகி நிலை பெற்றுவிடாது. நம்பிக்கை சரியானதாகவும் இருக்கலாம். தவறானதாகவும் இருக்கலாம். எடுத்துக்காட்டாக, 'குஷ்டநோய் பரம்பரை நோய் என்றும்' அது கர்ம நோய்; எனவே தீராதது என்றும் தான் பெரும்பாலான மக்கள் நம்பி வருகின்றனர். இந்த நம்பிக்கை தவறு என்கிறார் கடந்த 15 ஆண்டுகளாக குஷ்டரோக நிவாரண சேவையில் முழு நேர ஊழியமாற்றி வரும் திரு டி. எஸ் ஜகதீசன். திரு. ஜகதீசனின் குஷ்டரோக நிவாரண சேவையை பாராட்டி இந்திய அரசாங்கம் அவருக்கு 'பத்மஸ்ரீ' பட்டம் வழங்கியிருக்கிறது.

திரு. ஜகதீசன் அரசாங்கத்திற்குச்சமர்ப்பித்துள்ள அறிக்கையில் அவர் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் :

"இந்த வியாதியைப் பற்றி மக்கள் காரணமில்லாமல் பயந்து கொண்டிருக்கிறார்கள். அந்த பயத்தால் சமூகத்தில் ஒரு பீதியை வளர்த்துக்கொண்டு வருகிறார்கள். இவ்வியாதி தொட்ட உடனேயே ஒட்டிக்கொள்ளும் தொத்து நோய் அல்ல. பல ஆண்டுகளாக நெருங்கிய தொடர்பு இருந்தால்தான் இது பீடிக்கிறது. அதுவும் 15 வருடத்திற்குள் இருக்கும் சிறுவர்களைத்தான் பீடிக்கிறது. விஞ்ஞான முறைப்படி நவீன சிகிச்சையளித்து வந்தால் இந்த வியாதியைக் குணப்படுத்தி விடலாம் என்பது இப்போது நிரூபிக்கப் பட்டு விட்டது."

இவ்வாறு அறிக்கை சமர்ப்பித்துள்ள திரு. ஜகதீசன், ஒவ்வொரு டாக்டரும் இந்த நோயாளிகளின் சிகிச்சையை மேற்கொண்டு, ஒவ்வொரு ஆஸ்பத்திரியிலும் இதற்கு மற்ற வியாதிகளுக்கு அளித்து வருவது போல் சிகிச்சையளித்து வந்தால் ஒரு தலைமுறையிலேயே குஷ்ட ரோகத்தை ஒழித்து விடலாம் என்றும் நம்பிக்கை ...கிருக்கிறார்.

## நோபல் பரிசுபெற்ற விஞ்ஞானிகள் இருவர்.

ஒரே பல்கலைக் கழகத்தில் பணி புரியும் இரு அமெரிக்க விஞ்ஞானி களுக்கு 1960-ம் ஆண்டுக்குரிய பௌதீக, இரசாயன நோபல் பரிசுகள் கிடைத்துள்ளன. ஸ்வீடன் நாட்டு விஞ்ஞானக் கழகம் 1901-ல் நோபல பரிசுகளை நிறுவியது முதல் இதுவரையில் அமெரிக்கா 71 பரிசுகள் பெற்றுள்ளது. இப்போது அது பெற்ற பரிசுகள் முறையே 73, 74-வது பரிசுகளாகும்.

34 வயதான டாக்டர் டானெல்டு எ. கிளாஸர், பௌதீகத் துறை நோபல் பரிசும், அடுத்த மாதம் 52 வயதாகும் டாக்டர் வில்லராடு எப். லிபி, இரசாயனத்துறை நோபல் பரிசும் பெற்றுள்ளதாக அறிவிக்கப் பட்டுள்ளது.

இருவரும் கலிபோர்னியா பல் கலைக் கழகத்தில் ஆசிரியர்களாக உள்ளனர். பெர்க்லியிலுள்ள கல்லூரியில் கிளாசர் பணியாற்று கிறார்; லாஸ் எஞ்சல்ஸிலுள்ள கல்லூரியில் லிபி, இரசாயனப் பேராசிரியராகப் பணிபுரிகிறார்

### கிளாசர்

இதுவரை நோபல் பரிசுபெற்றவர்களில்—வயதில் இளையவர்களில் ஒருவர் டாக்டர் கிளாசர்; "குமிழி அறை" என்ற கருவியைக் கண்டு பிடித்ததற்காக அவருக்குப் பரிசு கிடைத்துள்ளது. அணு செயல்படுவதைப் பார்த்து அறிய அது ஒரு சன்னல் என்று கூறுகிறார்கள்.

கிளாசர், கிளீவ்லாந்தில் பிறந்தவர்; மணமாகாதவர். பல விஞ்ஞான விருதுகள் பெற்றவர். 10 ஆண்டுகளுக்கு முன்பு அவர் தம் "குமிழ் அறை" கருவிச் சோதனைகளைத் தொடங்கினர். 5 டாலர் (ரூ. 23-12-0) பெறுமானமுள்ள கருவிகளும், ஆறு புட்டி பீர் மதுவும் தாம் அவரிடம் இருந்தவை.

1952-ல் அவர் தமது "குமிழி அறை" கருவி மூலம், விரைவாகசென்ற அணுக்களின் தடங்களைப் படம் எடுத்தார்; மிக மெல்லிய காற்றுக் குமிழிகள் நூல்போல காட்சியளித்து அணுக்கள் சென்ற தடங்களைப் புலப் படுத்தின.

அணு உட்கருவின் தன்மையையும், அவற்றை ஒன்றாகப் பிணைத்து வைக்கும் சக்திகளையும் பற்றி நன்கு அறிந்து கொள்ள அவர் எடுத்த புகைப்படங்கள் உதவின.

### லிபி

அமெரிக்க அணுசக்தி கமிஷனில் ஐந்தாண்டுகள் உறுப்பினராகப் பணி புரிந்தவர் டாக்டர் லிபி. "காலம் கணிக்கும் அணு சக்திக் கருவி" கண்டுபிடித்ததற்காக அவருக்குப் பரிசு வழங்கப் பட்டுள்ளது. பழம் பொருள் படிவங்கள், மரம் முதலிய கரிமப் பொருட்களின் காலத்தைத் தீர்மானிக்கும் கருவி அது. வரலாற்றுக் காலத்திற்கு முந்திய அப் பொருட்களில் இருக்கும்கதிரியக்கமுள்ள கரிப்பொருளின் அளவைக் கொண்டு காலம் தீர்மானிக்கப் படுகிறது.

தொல் பொருள் இயல், நில உள்ளியல், பூ-பௌதீகம், முதலிய விஞ்ஞானத் துறைகளில் காலத்தைக் கணக்கிடக் கரி-14 எனும் இரசாயனப் பொருளைப் பயன்படுத்தும் அவரது புதிய முறைக்காக டாக்டர் லிபிக்கு நோபல் பரிசு வழங்க ஸ்வீடிஷ் விஞ்ஞானக் கழகம் முடிவு செய்தது. அணுசக்தித் துறையில் அவரது பணிகளுக்காக அல்ல.

உயிர்ப்பொருள் ஒன்றிலுள்ள கரி, அதிலுள்ள ஒவ்வொரு கிராம் கரிக்கும் ஒவ்வொரு நிமிடத்துக்கும் ஒரு அளவு குலைந்து போகும் குறிப்பிட்ட நிகழ்ச்சி நடக்கிறது என்று அவர் தீர்மானித்தார். இதை அடிப்படையாகக் கொண்டு, டாக்டர் லிபி தமது காலம் கணிக்கும் அணுசக்திக் கருவியை உருவாக்கினர். பல்வேறு பொருள்களின் வரலாற்றுக் காலத்துக்கு முந்திய மாதிரிகளின் சரியான காலத்தைக் கணக்கிடுகிறார்.

அவரதுகதிரியக்ககாலம்கணிப்பு முறையினல், 30, ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய மனிதன் அல்லது மிருகத்தின் எலும்புகளைக் கொண்டு அவற்றின் காலத்தை ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் குலைந்து கலைகிறது.

---

### சீர்காழி டி. மு. கோ
### O. S. 180/57

சரஸ்வதி அம்மாள் —வாதி
பிச்சுமணியர் மேடோவர்-வாதி
M. S. மணிஅய்யர் என்கிற ராஜாமணிஅய்யர் வகையறு —பிரதிவாதிகள்

பஞ்சரத்தினம் 7-ம் பிரதிவாதி ஷை நம்பரில் மேடோவர் வாதியாக ஏத்துக் கொள்ள மனுக் கொடுத்தும், 2 ம் பிரதிவாதி ராஜகோபால் பிள்ளைக்கு 3 முதல் 7 பிரதிவாதிகளை வார்சாக சேர்த்துக் கொள்ள மனுக்கொடுத்தும்; 7 ம பிரதிவாதிக்கு ஓட்டி சர்வ் செய்ய ஆர்டராகி, 28-11-60 ல் ஈரங்கி. மேடோவர் மனு, வார்சுமனு சம்பந்தமாக, 7ம் பிரதிவாதிக்கு ஆக்ஷேபனை இருந்தால், தெரிவித்துக் கொள்ளலாம்.

வி. சுவேதாரண்யம் ஐயர்
4 | 4009 | 178 அட்வகேட்

---

### குளித்தலை டி. மு. கோ
### S. C. 689 / 1960

அ. மு. முத்தராமன் செட்டியார் By Power agent. மு. சொக்கலிங்கம் செட்டியார் —வாதி

கு. தா. ஊத்துக்குழி பழனியப்ப செட்டியார் —பிரதிவாதி

ஷை நம்பரில் வாதி பிரதிவாதி பேரில் புரோ நோட்டுப்படி ரூ. 226-62 nP க்குதாவா செய்து 30-11-60 ல் வாய்தா போடப் பட்டுள்ளது. அன்று ஆக்ஷேபனை உள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ளலாம்.

K. திருவேங்கடாச்சாரியார்
வாதி வக்கீல்
6 | 4011 | 180

---

### சீர்காழி டி. மு. கோ.
### O. S. 423 / 1960

மொட்டயக் கோனர் —வாதி
சாமித்துரை படையாச்சி —பிரதிவாதி

ஷை நெம்பரில் பிரதிவாதி பேரில் வாதியால் பெர்தகப் பத்திரப்படி தொகைகிடைக்க தாவா செய்த பிரதிவாதிக்கு சம்மன் சர்வாகாதினல் பப்ளிகேஷனுக்கு உத்திரவாகி 18-11-60 ல் ஈரங்கி. ஆக்ஷேபனையை தெரிவிக்கத் தவறினல் எக்ஸ் பார்டியாக முடிவு செய்யப்படும்.

S. ராமமூர்த்தி
1 | 4006 | 175 அட்வகேட்

---

திருச்சிராப்பள்ளி House-Rent Controller கோர்ட்டில்
### HRC 233/1960

திருச்சி ஜம்புலிங்கம் பிள்ளை —மனுதார்

திருச்சி பழய மயிலஞ் சந்தை தென்சரகில் 52 நெ கடையில் இருந்த T. M. பால்தங்கவேல் நாடார் —எதிர் மனுதார்

மனுதார் மனுவில் கண்ட திருச்சி பழய மயிலஞ்சந்தை தென்சரகில் 52 நெ கடையிலிருந்து அப்புறப்படுத்தி ஸ்வாதீனம் கிடைக்கவேணுமாய் ஷை கோர்ட்டில் மனு செய்த ஷை மனு 19-11-60 தேதி வாய்தா. உமது கட்சியை தெரிவித்துக் கொள்ளாவிடில் ஒருதலைப் பட்க்ஷமாக தீர்ப்பாகி விடும்.

C. சந்திரசேகர உடையார்
மனுதாரின் அட்வகேட்
5 | 4010 | 179

---

### விருத்தாசலம் டி. மு. கோ
### O. P. 46 / 60

சின்னப்பிள்ளை அம்மாள் வகையரு By பவர் ஏஜண்ட் P. E. கணேசன் —மனுதாரர்கள்
ரெஸ்பாண்டென்ட் —இல்லை.

விருத்தாசலம் தாலூகா சொட்டவாணம், தெய்வசிகாமணிப் படையாச்சி குமாரர், தங்கவேல் படையாச்சிக்கு வரவேண்டிய கடன்களை வசூல் செய்து கொள்ள வார்சு சர்டிபிகேட் கோரி ஷை யார்களின் பவர் ஏஜண்ட் மூலம் மனுக் கொடுத்து, மனு ஈரங்கி 30-11-60 ல் வைக்கப்பட்டுள்ளது.

த. இராமகிருஷ்ணன்
2 | 4007 | 176 அட்வகேட்

---

### குளித்தலை டி. மு. கோ
### S. C. 602 / 1960

சி. அ. பெருமாள் கவுண்டன் —வாதி

புதுக்கோட்டை டிவிஷன் பொய்யாமணி வட்டம் விருத்தாபட்டி கிராமம் சொளப் பட்டி ராமன் 1, முத்தழகன் 2. —பிரதிவாதிகள்

ஷை நம்பரில் வாதி பிரதிவாதிகள் பேரில் புரோநோட் படி ரூ. 349·50 nP கிடைக்க தாவா செய்து 19-11-60 ம் தேதி வாய்தா போடப்பட்டுள்ளது. ஆக்ஷேபனையுள்ளவர்கள் அன்று தெரிவித்துக் கொள்ளலாம்.

K. திருவேங்கடாச்சாரியார்
3 | 4008 | 177 வாதி வக்கீல்

துணையாசிரியர் பேச்சு

# அதிசய மருந்து

பள்ளிக்குச் செல்லமாட்டேன் என்று அடம் பிடிக்கும் குழந்தைகளை அடித்துப் பிடித்து பயமுறுத்தி அனுப்பி வைக்கிறோம் அல்லவா? இதனால், அத்தகைய குழந்தைகளும் வேப்பங்காயைத் தின்பது போல வேண்டாவெறுப்பாகப்பள்ளிக் கூடத்திற்குச் செல்லுவதையும், வேறு சில குழந்தைதைகள் பெற்றோரின் மிரட்டலுக்குப் பயந்து பள்ளிக்குச் செல்வதாக வீட்டிலிருந்து புறப்பட்டுக் களவடிப்பதையும் நாம் பார்க்கிறோம். நம்மில் இந்த இரண்டாவது முறையைக்கையாண்டவர்கள் எவ்வளவு பேர் இருப்போம். அதிகம் ஏன்? நான் எனது பள்ளிப் பருவத்தில் பள்ளிக்கூடம் என்றாலே அது மிருகங்களை அடைத்து வைக்கும் சர்க்கஸ் கூடம் என்று கருதி, அங்கே நம்மையெல்லாம் ரம்பத்தூளைத் தின்னும்படி கட்டாயப் படுத்துகிறார்கள் என்று கருதிக் கொண்டு, சிவன் கோவிலைக் கண்ட வைணவர்களைப் போல ஒதுங்கிப் போயிருக்கிறேன். அதற்காக எனக்குக் கிடைத்த தண்டனைகளை அப்பப்பா இன்றைக்கு நினைத்தாலும் பயங்கரமாகத்தான் இருக்கிறது. என்னை அடிப்பதற்கென்று ஒடித்த புளியன் விளார்களைச் சேர்த்து வைத்தது, அவைகளை விறகுக்கு உதவும்படியாக நன்றாகக் காயவைத்து நிறுத்துப் பார்த்தால் அரை 'டன்னுக்குக்' குறையாது. ஆனால்,

இன்று பிள்ளைகளை அடிக்காமலும், மிரட்டாமலும் அவைகளை 'ஸ்வீட்' சாப்பிடுவது போல விரும்பிப் பள்ளிக்கூடம் செல்லுவதற்கு ஊக்கமளிக்கும் அதிசயமான கருந்து ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாக ஒரு செய்தி வெளியாகி யிருக்கிறது. பள்ளிக்கூடம் போகப் பயப்படும் அல்லது வெறுப்படையும் (என்னைப் போன்ற) பிள்ளைகள் பள்ளிக்குச் செல்ல ஊக்கமளிக்கும் இந்த அதிசய மருந்தை பர்மிங்காமிலுள்ள சாகுலஸ் பர்னஸ் என்ற டாக்டர் சிபார்சு செய்திருக்கிறார். கடந்த சில வருடங்களில் 30 முதல் 40 குழந்தைகளுக்கு இந்த மருந்து கொடுத்துப் பரீட்சித்துப் பார்த்ததில் நல்ல பலன் கிடைத்திருக்கிறதாம். இம்மருந்து உயிருக்கோ, உடலுக்கோ எந்தவிதமான தீமையும் செய்வதில்லையாம். பர்மிங்ஹாம் நகரக் கல்விக் கமிட்டிக்கு ஷெ டாக்டர் அனுப்பிவைத்த அறிக்கையில் இந்த மருந்தைச் சிபாரிசு செய்திருக்கிறாராம். நமது நாட்டிலும், பள்ளிக் கூடத்திற்குக் களவடிக்கும் — அல்லது பள்ளிக் கூடத்திகுச் செல்ல அடம் பிடிக்கும் குழந்தைகள் விஷயத்தில் ஏன் இந்த அற்புத மருந்தைக் கையாளக் கூடாது?

## சும்மாகிடந்தசங்கை....

ஆம். அகில உலக மக்களும் அஞ்சி நடுங்கி எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த நாள் 1960 ஜூலை 14. பூமியில் அணு குண்டுகள் வெடித்து, அதை யொட்டி நிலநடுக்கமும் கடல்கொந்தளிப்பும் ஏற்பட்டு உலகம் அழியும் என்று இத்தாலிய சந்நியாசிகள் சிலர் 'ஜோஸ்யம்' கூறிவிட்டு, உலகம் அழிந்தாலும் தாங்கள் அழிந்து படாமல் இருப்பதற்காகப் பிளாங் மலையில் ஏறி நின்று ஜப தபங்கள் செய்ததும், இத்தாலிய சந்நியாசிகளின் கூற்றுப் பொய்யானது என்று அகில இந்திய வான சோதிட சாஸ்திரக்கழகத் தலைவர் முதற்கொண்டு "அஞ்சடி (நடைபாதை) சோதிட நிபுணர்கள்" வரை அறிக்கை பல விட்டு 'அஞ்சாதீர்! ஆபத்தில்லை!' என்று அபயம் கொடுத்ததும் இன்னும் நம் மனத்திரையினின்றும் அழிந்து விடவில்லை.

அதற்கிடையிலேயே 'இன்னும் 66 ஆண்டுகளில் அதாவது கி. பி. 2026ம் ஆண்டில் உலகத்திற்கு முடிவு ஏற்படும்; மனித இனமும் அதுவரை பெருகிப் பூர்த்தியடையும்; பின் தானாக அழிந்து போகும்; அப்போது மனிதர்கள் பசியாலோ, கதிர்த் தாக்குதல்களாலோ, நோயாலோ ஆண்டவன் செயலாலோ சாக மாட்டார்கள்; மனிதர்கள் நசுக்கப்பட்டுச் சாகடிக்கப் படுவார்கள், என்று அமெரிக்க விஞ்ஞானிகள் பெரும் ஆராய்ச்சிசெய்து கண்டுபிடித்துக் கூறியிருப்பதாக இப்போது ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது.

பிறந்தவர்களுக்கு இறப்பு சர்வ நிச்சயம். மக்களில் பெரும்பாலும் எல்லோருக்கும் தெரிந்த சர்வ சாதாரணமான உண்மை இது. ஆனாலும் கூட, சாவுக்குப் பயப்படுகிற கோழைத் தன்மை பலரிடம் குடி கொண்டிருக்கத்தான் செய்கிறது. மனித சமுதாயம் அஞ்சி அஞ்சிச்செத்துத்தான்வாழ்கிறது; வாழ்ந்து சாகின்றவர்கள் மிகக் குறைவு. இந்நிலையில், 'ராட்சச ராக்கெட்டு' களைப் பறக்க விட்டு, மேலும் மேலும் அஞ்சி நடுக்கமுறச் செய்வது எத்தனை தூரம் புத்திசாலித்தனமானது என்பதை அந்த 'ராக்கெட் வீரர்கள்' சிந்தித்துப் பார்ப்பது நல்லது. அதைப் பற்றிச் சிறிதும் சிந்தித்துப்பார்க்காமல் இம்மாதிரியான ராக்கெட்டுகளைப் பறக்க விடுவது, சும்மா கிடந்த சங்கை ஊதிக்கெடுத்த... கதைபோலவே முடியும்.

## ஆபரேஷன் வெற்றி. ஆனால்....

ஆபரேஷனில் முழு வெற்றி கிடைத்து விட்டது; ஆனாலும் ஆள்தான் பிழைக்கவில்லை என்பார்கள். இதற்கு நேர்மாறாக ஆபரேஷனும் வெற்றியாகி, நோயாளியும் பிழைத்து விட்ட செய்திகளும் ஏராளமாக வந்து கொண்டுதான் இருக்கின்றன. அண்மையில், லண்டனில் உள்ள ரண சிகிச்சை வல்லுநர் சிலர் ஓர் அற்புதமான ஆபரேஷனை செய்து முடித்து, நோயாளியையும் பிழைக்க வைத்திருக்கிறார்கள். மகனுக்கு மூத்திரக்காய்க் கோளாறு ஏற்பட்டுவிட்டதாம். அதற்கென நடைபெற்ற ஆபரேஷனின் போது, தனது பிள்ளைப் பாசத்தால் தந்தையே வலிய வந்து தனது மூத்திரக்காயைத் தானம் செய்ய முன் வந்தாராம். டாக்டர்களும், தந்தையின் மூத்திரக்காயை மகனுக்கும் மகனின் மூத்திரக்காயைத் தந்தைக்கும் மாற்றியமைத்து இந்த அபூர்வ ஆபரேஷனில் வெற்றி கண்டுவிட்டார்கள்; தந்தையும் மகனும் குணமடைந்து வருகிறார்கள்.

அறுவை மருத்துவத்தில் இவ்வளவு முன்னேறியுள்ள இங்கிலாந்து நாட்டில் இன்னொரு விசித்திரமும் நடைபெற்றிருக்கிறது. 1958–ல் ஆபரேஷன் செய்த பொழுது, நோயாளியின் உடலுக்குள் பஞ்சு, துணி போன்ற பொருள்கள் தங்க நேர்ந்து, 5 பேர் இறந்துவிட்டனராம். அது மட்டுமல்ல, இப்படி ஆபரேஷன் செய்யும் முறையில் ஏற்பட்ட தவறுதல்களால் இங்கிலாந்தில் 100 பேருக்குமேல் இறந்து போனார்களாம்.

இங்கிலாந்தில் பஞ்சு துணி போன்ற பொருள்கள் தாமே நோயாளியின் உடலுக்குள் தங்கின. இதென்ன பிரமாதம்! அண்மையில், கேரளாவில் திருவனந்தபுரத்திலுள்ள எஸ். ஏ. டி. ஆஸ்பத்திரியில் ஒரு பெண்ணுக்கு இரண்டு முறை ஆபரேஷன் செய்தார்களாம். ஏன் தெரியுமா? முதல் தடவை ஆபரேஷன் செய்யும் பொழுது அந்தப் பெண்ணின் உடலுக்குள் டாக்டர் உபயோகித்த கத்தி சிக்கிக்கொண்டதாம். அந்த கத்தியை எடுப்பதற்காகவே இரண்டாவது முறை ஆபரேஷன் செய்யப்பட்டதா என்று கேரள அசெம்பிளியில் கேள்வி கேட்டபோது இல்லை என்று கேரள சுகாதார

அமைச்சர் பதிலளித்திருக்கிறார். அமைச்சர் மேலும் இது பற்றிக் குறிப்பிடுகையில், நிபுணர்கள் கருத்துப்படி அந்தக் கத்தி அந்தப் பெண்ணின் உடலுக்குள்ளேயே தங்கிவிட்டிருந்தாலும் கெடுதி ஏற்பட்டிராதென அவரது இலாகாவைச்சேர்ந்த மருத்துவத்துறை நிபுணர்கள் கருதியதாகவும் தெரிவித்திருக்கிறார். அமைச்சர் ஏன் இப்படிச்சுற்றி வளைக்க வேண்டும்? முதல் தடவை செய்யப்பட்ட ஆபரேஷனில் பெண்ணின் உடலுக்குள் சிக்கிக்கொண்ட கத்தி இரண்டாவது ஆபரேஷனின் போது எடுக்கப்பட்டுவிட்டது. எனவே ஆபரேஷனில் முழு வெற்றி கிடைத்து விட்டது என்று கூறிப் பெருமை கொள்ளலாமே! விஞ்ஞானத் துறையிலும், அறுவை மருத்துவத்திலும் எவ்வளவோ முன்னேறியுள்ள இங்கிலாந்திலேயே, வெறும் பஞ்சு, துணி போன்ற பொருள்கள் உடலுக்குள் சிக்கி, ஐந்து பேர் இறந்திருக்கிறார்கள் என்னும்போது, கேரளாவில், கத்தியே உடலுக்குள் தங்கிய போதும் ஆபரேஷன் வெற்றிகரமாக நடை பெற்றிருப்பதற்கும், ஆள் பிழைத்திருப்பதற்கும் மந்திரி பெருமைப் படுவதில் என்ன தவறு?

## தமிழர் இசை.

இசை என்பதென்ன? வசைபடாத சொல்லெல்லாம் இசை. அதுவே தமிழ்ச் சொல். பிறந்தநாள் தொட்டு இறக்கும் வரை நம்மிடம் இசை உண்டு. அது எழிசை. நாம்தான் பாலை, முல்லை, நெய்தல், மருதம், குறிஞ்சி ஆகிய நம்முடைய நிலங் குறித்துப் பண் அமைத்தவர்கள். மண்ணுக்குப்பண் அமைத்த பெருமை நமக்குத் தான் உண்டு. வேளைக்கு ஒரு பண்; களிப்புக்கு, கவலைக்கு, காதலுக்கு ஏன் ஒப்பாரிக்கு கூடப் பண் அமைத்தவர்கள் நாம்.

ம. பொ. சி.

## சோதிடக்கலை

அண்மையில் பெங்களூரில் உள்ள அமெரிக்கச் செய்தி நிறுவன நிலையத்தில் சோதிடக் கலையின் சிறப்பியல்புகள் பற்றியும், அமெரிக்காவில் இன்று சோதிடக்கலை மறுமலர்ச்சி பெற்று விளங்குகிறது என்றும் பெங்களூர் 'அஸ்ட்ராலஜிகல் மாகஸின்' ஆசிரியரும், சோதிடக் கலையிற் சிறந்து விளங்குபவராகக் கருதப்படுகிறவருமான திரு. பி. வி. ராமன் குறிப்பிட்டிருக்கிறார். இன்று இங்கும் சோதிடத்தில் பற்றும் பெரு நம்பிக்கையும் கொண்டு விளங்குவோர் எண்ணற்றவர்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அமெரிக்காவில், விஞ்ஞானிகள், தொழிலதிபர்கள், மருத்துவர்கள், மனோதத்துவ சிகிச்சை நிபுணர்கள் கூட சோதிடத்தின் மீது எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதை திரு. பி. வி. ராமன் விரிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

சோதிடக் கலையையும், அதை நம்புகிறவர்களையும் இந்தியப் பிரதமர் நேருஜி அவர்கள் பல சந்தர்ப்பங்களில் மிக வன்மையாகச் சாடியிருக்கிறார். சோதிடர்களின் கூற்றை நம்பி, இங்கு நடக்கின்ற கொடுமைகள் ஏராளம். சில நாட்களுக்கு முன்பு, ரேவதி நட்சத்திரத்தில் பிறந்த குழந்தை தாய் மாமனுக்குத் தீங்கு செய்யும் என்ற சோதிடக் கூற்றை நம்பிக் குழந்தையைக் கொலை செய்த கோர நிகழ்ச்சியைப் பத்திரிகைகளில் படித்தோம். இத்தகைய சம்பவங்கள் இப்போதுதான் புதிதாக நடப்பன அல்ல. இதற்குக் காரணம், சோதிடக்கலை என்பதில்லை. அரைகுறைச் சோதிடக் கலைஞர்களும், அவர்களை அணுகி அவர்கள் கூறுகின்ற பொய்யையும், புனைசுருட்டையும் நம்புகின்ற அறியாமையுமே என்பதில் தவறில்லை. பேனா பிடித்தவர்களெல்லாம் எழுத்தாளர்கள் என்பது போல— பஞ்சாங்கத்தைத் தொட்டவர்களெல்லாம் சோதிடர்கள் என்று கூறிக் கொள்ளும் அவலநிலை இருக்கும் வரை சோதிடக் கலை வளரமுடியாது.






Edited Printed & Published by Triloka Sitaram for ... Chintamani Bazaar, Tiruchy.